Registered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 34—No. 6



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'.

மலர் 34 | பிலவ ஆனி 1961 ஜூன் | இதழ் 6

உள்ளுறை

| | பக்கம் |
|---|---|
| அருள்சக்தி சிவம் ... | 209 |
| சிவார்ச்சனு போதம் ... | 219 |
| பதிகமா ? பதிகமும் பாடலுமா ? பாடல் மட்டுமா ? ... | 223 |
| சேக்கிழாருக்கும் சிறுமையா ? ... | 229 |
| கொடிக்கவி ... | 237 |

பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3

தனிப்பிரதி அணு

# செய்திகள்

சைவ சித்தாந்தச் சொற்பொழிவுகள் : நமது சமாஜத்தின் சார்பில் 22-5-61, 23-5-61 ஆக இரண்டு நாட்களிலும் புலவர் - திரு. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்., அவர்கள் "திருவுந்தியார்", "திருக்களிற்றுப்படியார்", "சிவஞான போதம்" என்னும் பொருள்கள் பற்றியும், 24-5-61, 25-5-61 இவ்விரண்டு நாட்களிலும் திரு. ரா. சண்முக சுந்தரஞ் செட்டியார் அவர்கள் "சிவஞான சித்தியார் - பரபக்கம், சுபக்கம்" என்னும் பொருள்பற்றியும் சொற்பொழிவாற்றினர்கள். மற்ற சாத்திரங்களைப்பற்றிய சொற்பொழிவுகள் கூடிய விரைவில் நடைபெறும். செய்தித்தாள்களில் அவைபற்றி விளம்பரங்கள் மூலம் அறிவிக்கப்படும்.

சமாஜச் செயற்குழுக் கூட்டம் : 28-5-61 காலை 10 மணிக்குக் கூடிக் கட்டிட ஆவணப்பதிவு, மலேயாவில் சமாஜ ஆண்டு விழா இவை பற்றி ஆலோசிக்கப்பட்டது.

மகிழ்ச்சி : நமது சமாஜத்தின்பாற் பேரன்புடைய பெருந்தகையும், செந்தமிழ்ச் சைவ நலங்களிற் சிறந்துயர்ந்த சான்றோரும் ஆகிய திரு. வி. சுப்பிரமணிய நாடார், பி.ஏ., பி.எல்., அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராகவும் ; நமது சமாஜத்தின் ஆராய்ச்சிக் குழுவினருள் ஒருவராகப் பல ஆண்டுகள் இருந்து பணி புரிந்தவரும், தமிழகத்தின் தலைசிறந்த தமிழ்ப்பேரறிஞராகப் புகழ்பெற்றுத் திகழ்பவரும் ஆகிய டாக்டர் - திரு. மு. வரதராசனர், எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி., அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறைத் தலைவராகவும்; நமது சமாஜத்தின் துணைச்செயலராக மட்டுமேயன்றிச் "சித்தாந்தம்" இதழின் துணையாசிரியராகவும் இருந்து அரும்பணிகள் பலபுரிந்துள்ள பேராசிரியர் திரு. அ. மு. பரமசிவானந்தம், எம்.ஏ., எம்.லிட்., அவர்கள் சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவராகவும் நியமனம் பெற்றுள்ளமை குறித்துச் சமாஜம் பெரிதும் மகிழ்ச்சி கொள்கின்றது ! இப் பெருமக்கள் மூவரும் நீடினிது வாழ்ந்து, தமிழ் நாட்டிற்கு மேலும் பற்பல நற்றொண்டுகளைச் செய்தற்குத் துணைபுரியுமாறு இறையருளைச் சமாஜம் வழுத்துகின்றது !

திருவாசகமணிக்குப் பாராட்டு : சென்னைத் திருமயிலைக் கபாலீச்சுரர் திருக்கோயிலில் தொடர்புற 22 நாட்கள் 'திருவாசகமணி' கே. எம். பாலசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்., அவர்களால் நிகழ்த்தப் பெற்று வந்த பெரியபுராணச் சொற்பொழிவுகள் 30-5-61 செவ்வாய்க்கிழமையன்று

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

| மலர் 34 | பிலவ ஆனி 1961 ஜூன் | இதழ் 6 |
|---|---|---|

## அருள்நந்தி சிவம்

(முருகவேள்)

(மலர் - 34; இதழ் - 5; பக்கம் - 167 தொடர்ச்சி)

பல்கலைக் குரிசில்: அருள்நந்தி சிவம் 'சகலாகம பண்டிதர்' மட்டுமேயன்றி, ஒரு சிறந்த 'பல்கலைக் குரிசில்' எனவும் விளங்கி யிருந்திருக்கின்றார். மந்திரம் யோகம் மருத்துவம் இரசவாதம் முதலிய கலைகளில் அவர்க்கு நுணுகிய பேருணர்வு அமைந்திருந்தது எனத் தெரிகின்றது. இறைவன் "இந்தனத்தின் எரிபோல் மந்தி ரத்தின் வந்துதிப்பன்" எனவும், "......அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க மதி அருக்கன் அணையரவம்போல் தோன்றும் ஆன்மாவில் அரனே" எனவும் பிறவாறும் ஆங்காங்கே மந்திரங்களின் இயல்புபற்றி அருள்நந்திசிவம் குறிப்பிட்டுச் செல்கின்றார்.

"அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகும்.
அவுடதமக் திரம்உடையார்க்கு அருவிடங்கள் ஏறா."

என அவர் கூறுதலும் ஈண்டுணரற்பாலது. பிரணவ மந்திரம் 'சமட்டி' 'வியட்டி' என இருவகைப்படும் என்றும், அவற்றுள் வியட்டிப் பிரணவமாகிய அகர உகர மகர விந்து நாதங்களும் அவற்றின் அதிதெய்வங்களும், மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களைச் செலுத்தி நிற்கக், கடலின்கண்ணே திரை புதிது புதிதாகத் தோன்றியும் ஒடுங்கியும் வருமாறுபோல, உயிரின்கண் பல

திற உணர்வுகள் உதித்து ஒடுக்கும் என்றும், இவ்வுண்மை யானது இடைகலை பிங்கலை நாடிகள் வழியாய் ஓடும் வாயு இரண்டினையும் தடுத்துச் சுழுமுனை நாடியிற் செலுத்திச் செய்யும் யோகப்பயிற்சி யுடையார்க்கே இனிதுணர்தல் இயலும் என்றும் (சுபக். 193, 194) அருள்நந்திசிவம் குறிப் பிடுகின்றார். அம்மட்டோ! சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்ர மார்க்கம் தாசமார்க்கம் என்பவைகளைப்பற்றி விளக்க நேர்ந்துழி,

" சகமார்க்கம் புலன்ஒடுக்கித் தடுத்துவளி இரண்டும்
சலிப்பற்று முச்சதுர முதலா தாரங்கள்
அகமார்க்கம் அறிந்தவற்றின் அரும்பொருள்கள் உணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி அலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க அமுதுஉடலம் முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகள்
உகமார்க்க அட்டாங்க யோகம் முற்றும்
உழத்தல்உழந் தவர்சிவன்தன் உருவத்தைப் பெறுவர் "

என அவர் அட்டாங்க யோகத்தின் இயல்புகளைப் புலப் படுத்தி யிருத்தலும் நம்மனோர் உளங்கொளற்குரியது. இவ்வாறே இரசவாதம் பற்றிய செய்திகளை, "செம்பிற் காணலுறும் களிம்பு இரத குளிகை பரிசிக்கக் கழியும்" "செம்பு இரத குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச் செம்பொனுடன் சேரும்" "அருங்களங்கம் அறுக்கும் அக்குளிகைதானும் பொன் ஆகாதாகும்" என்று ஆண் டாண்டு உவமையாகக் கூறிச் சுட்டிச் செல்லுதலின், அருள்நந்தி சிவத்திற்கு இரசவாதம் முதலிய கலைகளில் இருந்த உணர்வு புலனாகின்றது. மற்றும் அவர் தோற் பாவைக்கூத்து, தொல்லை மரப்பாவை இயக்கம், நாடகம் நடித்தல், அதன்கண் ஒருவனே இராவணாதி பாவகம் உறு தல், பார்ப்பாய வேடம் கட்டி ஆடும் பரிசு முதலிய பல செய்திகளைக் குறித்தலும் காண்கின்றோம்.

ஈதொன்றோ! இவர்க்குச் சோதிடக் கலையிலும் நல்ல புலமை அமைந்திருந்ததென்பது, பரபக்கம் 36-ஆம் செய் யுளாற் புலனாகின்றது. மேலும்,

" வண்டுகள் ஆதி மாறும் மயிர்க்குட்டி மற்றோர் சென்றுப்
பண்டைய உருவம் தானே வேட்டுவ னாய்ப்பி றக்கும் "

" இரங்கியவா ரணம்ஆமை மீன்அண்டம் சினையை
இயல்பினொடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதாம் ஆக்கும்......"

எனப் போதரும் சுபக்கச் செய்யுள்களால் (சுபக். 134, 328), இஞ்ஞான்றைச் சிற்றுயிர்நூற் றுறைகளிலும், அருள் நந்தி சிவம் கொண்டிருந்த ஈடுபாட்டுணர்வை இனிது தெளியலாம். இங்ஙனமெல்லாம் இவர் பெற்றிருந்த பல திறக் கலைப் பயிற்சிகளினாலேயே,

" மந்திரத்தால் மருந்துகளால் வாய்த்தயோ கத்தால்
மணிஇரத குளிகையினால் மற்றும் மற்றும்
தந்திரத்தே சொன்னமுறை செய்ய, வேத
சகலகலை ஞானங்கள் திரிகால ஞானம்
அந்தமிலா அணிமாதி ஞானங்கள் எல்லாம்
அடைந்திடும்......"

எனக் கட்டுரைத்துக் கூறக்கூடிய திறமுடையவராகத் திகழ்கின்றார்! இவ்வாற்றால் அருள்நந்தி சிவம் இணையற்றுச் சிறந்துயர்ந்த ஒருபெரும் 'பல்கலைத் தூரிசில்' ஆவர் என்னும் உண்மையை, நன்கினிது நாம் உணர்தல் கூடும்.

உலகியல் நடைமுறை யுவமைகள்: அருள்நந்தி சிவம் தாம்கூற எடுத்துக்கொண்ட தத்துவக் கருத்துக்கள் பொது மக்களால் உணரப்படுதற்கு மிகவும் கடினமானவை எனினும், அவற்றை 'எண்பொருளவாகச் செலச்சொல்லி' இன்சுவைகெழும விளக்குந் திறம் பெரிதும் உடையவராகத் திகழ்கின்றார். யாவரும் இனிதறிந்த உலகியல் நடைமுறைகளில் வைத்துத் தாம் கூறுதற்குரிய கருத்துக்களை எளிமையமையவும் சுவை பொருந்தவும் அவர் கூறிச் செல்லுந்திறம் பெரிதும் வியந்து மகிழற்பாலதாயுள்ளது. இறைவன் மாயையினின்று உலகங்களைப் படைக்கும் முறைமையினை,

" காரிய காரணங்கள் முதல்துணை நிமித்தம் கண்டாம்.
பாரில்மண், திரிகை, பண்ணு மவன்,முதல் துணைநிமித்தம்.

தேரின்மண் மாயை யாகத், திரிகைதன் சத்தி யாக
ஆரியன் குலால னய்நின்று ஆக்குவன் அகிலம் எல்லாம் !"

எனவும்; இறைவனது மறக்கருணையின் இயல்பினை,

" தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் தம்சொ லாற்றின்
வந்திடா விடின், உறுக்கி வளாரினால் அடித்துத் தீய
பந்தமும் இடுவர். எல்லாம் பார்த்திடிற் பரிவே யாகும்.
இந்தநீர் முறைமை யன்றோ, ஈசனார் முனிவும் என்றும் ?"

எனவும்; உயிர்கள் இன்ப துன்பங்களை நுகருமாறுசெய்து, இறைவன் அவற்றின் நல்வினை தீவினைகளை முறையே அறுத்துத் தீர்த்தருளும் செய்தியினை,

" மண்ணுளே சிலவியாதி மருத்துவன் அருத்தியோடும்
திண்ணமாய் அறுத்துக் கீறித் தீர்த்திடும். சிலநோய் எல்லாம்
கண்ணிய கட்டிபாலும் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்.
அண்ணலும் இன்ப துன்பம் அருத்தியே வினைஅ றுப்பன்."

" மறைகள் ஈசன்சொல், அச்சொல் வழிவாரா உயிரை வைக்கும்
சிறைகள் மாநிரயம். இட்டபணி செய்வோர் செல்வத்தோடும்
உறையும்மா பதிகள் உம்பர் உலகங்கள். யோனிக் கெல்லாம்
இறைவன் ஆணையினால் இன்ப துன்பங்கள் இயைவ தாகும்!"

எனவும்; இறைவன் மாயாமலத்தினின்று தனுகரண புவன போகங்களைப் படைத்தளித்து உயிர்களின் ஆணவ மலத்தினைப் போக்கும் தன்மையினை,

" எழும்உடல் கரணம் ஆதி இவைமலம். மலம் மலத்தாற்
கழுவுவன் என்று சொன்ன காரணம் என்னை? என்னில்,
செழுநவ அறுவை சாணி உவர்செறி வித்து அழுக்கை
முழுவதும் கழிப்பன்; மாயை கொடுமலம் ஒழிப்பன் முன்னே[ன்!"

எனவும் யாவரும் இனிதறிந்த எளிய உலகியல் நடைமுறை உவமைகளின் வைத்து, அரிய பெரிய தத்துவக் கருத்துக்களை அருள்நந்திசிவம் விளக்கியருளியிருக்கும் வித்தகத் திறம், பெரிதும் வியந்து போற்றத் தகுவதொன்றன்றோ ?

புராண கதைகள்: தத்துவக் கருத்துக்களும் செய்திகளும் பொதுவாகப் பெரும்பாலான பாமர மக்களுக்குச் சுவைபயவாதவை ; அவர்களாற் புரிந்துணர்ந்து கொள்ளப்

படுதற்குக் கடினமானவை.[1] எனினும், அவற்றை இங்ஙனம் உலகியல் நடைமுறை யுவமைகளைக் கொண்டு மட்டுமேயன்றி, இனிய எளிய புராண கதைகளை எடுத்துக் காட்டியும், தாம் விளக்கத் தலைப்படும் கருத்துக்களைக் 'கடுத்தின்னுதானைக் கட்டி பூசிக் கடுத்தீற்றிய வாறுபோல' இனிமையூட்டிச் சுவைநிரம்பச் செய்து 'கேட்டார்ப் பிணிக்கும் தகையவாக்கி' விளக்கிச்செல்லும் சொல் வன்மைத் திறத்தில் அருள்நந்திசிவம் தனிப்பெருஞ் சிறப்புற்றுளிர்கின்றார்! இவ்வாற்றால், கற்றறிந்த ஒரு சிலருக்கே தனியுரிமை யுடைமையாகக் கருதப்பெற்றுவந்த தத்துவ நூற் செய்திகளைப் பெரும்பாலான பாமரமக்கள் அனைவருக்கும் கூட உரிய பொதுவுடைமையாகத் தமிழிற் செய்தருளிய பெருமை,[2] ஆசிரியர் அருள்நந்தி சிவத்தினைச் சாரும் எனலாம். அவர் " சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் " எனச் சுட்டியருளிய குறிப்பின் நுட்பமும் நம்மனோர் நனியெண்ணி யுணரற்பாலது. முதல்வன் அசிந்திதனுயினும் சிந்திதனாய் உருவத் திருமேனி கொள்ளுதல் உலகுயிர்களுக்கு அருள்புரிதற் பொருட்டே என்பதனை,

" நாயகன் கண்ண யப்பால் நாயகி புதைப்ப எங்கும்
பாயிருள் ஆகி மூடப் பரிந்தல கினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தி னாலே சுடர்ஒளி கொடுத்த பண்பில்
தேயமார் ஒளிக ளெல்லாம் சிவன்உருத் தேச தென்னார் "

என்றும்; இங்ஙனம் உலகுயிர்களுக்குப் பல்வேறு வகைப்பட அருள்புரி தொழிலை நிகழ்த்துதற்பொருட்டு, ஒன்றொ

1. " It is easy to smile at the exquisite rhapsodies of Plato or the dull dogmatism of Descartes or the arid empiricism of Hume or the bewildering paradoxes of Hegel, and yet withal there is no doubt that we profit by the study of their works."

—Dr. S. Radhakrishnan, Indian Philosophy, p. 55.

2. " They are the great literature of the country, and at the same time vehicles of the great systems of thought. The Puranas contain the truth dressed up in myths and stories, to suit the weak understanding of the majority. The hard task of interesting the multitude in metaphysics is achieved in India."—Ibid., p. 25.

டோன் றெவ்வா வேடமாகிய பலதிற உருவத் திருமேனி களைக் கொண்டு உலகை நீங்கி நிற்கும் இறைவன், உலகி னுக்கு உயிருமாய் நிற்கும் இயல்பினை,

"கண்ணுதல் யோகிருப்பக் காமன்நின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவர்ஆதி மெலிந்தமை ஓரார்! மால்தான்
எண்ணிவேள் மதனை எவ எரிவிழித்து, இமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந்துயிர்க்குப் பேரின்பம் அளித்ததோரார்"

என்றும்; இறைவன்பால் அன்பில்லாதார் செய்யும் சிறந்த அறங்களும் மறமாகும், இறைவன்பால் அன்புடையார் செய்யும் கொடிய மறங்களும் நல்லறமாகும் என்னும் கருத்தினை,

"அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறம தாகும்.
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவம் ஆகும்.
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி,
நாரினிற் பாலன் செய்த பாதகம் நன்மை யாய்த்தே"

என்றும்; பிறவிதோறும் உயிர்களின் கன்மத்துக் கேற்ப உடம்பும் மூலவடிவமும் (யோனியும் அச்சும்) மாறும் என்னும் உண்மையினை,

"அகலிகை கல்ல தானள். அரிபல பிறவி யானன்.
பகலவன் குலத்திற் றேன்றிப் பாரெலாம் முழுதும் ஆண்டு
நிகரிலா அரச னுகும்சிலந்தி.நீ டுலகம் போற்றச்
சகமதில் எலிதான் அன்றே? மாவலி யாய்த்துத் தானே!"

என்றும் அருள்நந்திசிவம் இனிய எளிய புராணகதைகளை வாயிலாகக் கொண்டு, அரிய பெரிய தத்துவநூற் கருத்துக் களைச் சுவை பெருக விளக்கியுள்ளமை காணலாம். ஆயி னும், இதுபற்றிச் சைவ சித்தாந்தத்திற்குப் புராண கதை களே அடிப்படைபோலும் என்று எவரும் கருதிவிடற்க! இப்புராண கதைகளெல்லாம் 'கொள்வோன் கொள்வகை அறிந்து அவன் உளங் கொளக்' கூறுதற்குரிய ஆசிரிய இலக்கணத்திற் கேற்ப 'அவ்வளவின் அவன் மகிழ்க' என்னும் நியாயம் பற்றி எடுத்தாளப் பட்டனவே யன்றிப் பிறி தில்லை என அனைவரும் கடைப்பிடிக்க!

தத்துவ நூலில் நீதிநூற் கருத்துக்கள் : இந்தியத் தத்துவ நூல்கள் உலகியல் நடைமுறை ஒழுக்க இயல்புகள் (Ethics) குறித்து விளக்குவதில்லை என மேலைநாட்டு அறிஞர்கள் ஒருசிலர் குறைகூறுவ துண்டு.[3] ஒழுக்கம் என்னும் அடிப்படைக் கால்கோளின் மீதுதான் சமயவுணர்வும் வாழ்வும் ஆகிய பெருமாளிகை அமைந்து திகழ்தல் இயலும். ஒழுக்கம் இல்லாத பொழுது வெறும் சமயவுணர்வும் நம்பிக்கைகளும் சிறிதும் பயன்பட மாட்டா. உயர்ந்த ஒழுக்க நெறியில் நின்று உள்ளத் தூய்மையும் உயிர்த் தூய்மையும் பெற்ற புனிதப் பெரியோர்களுக்கே, தத்துவச் சிந்தனை புலகில் மிகமேலான மெய்யுணர்வுக் கருத்துக்களைக் கண்டுணர வல்ல பெருநலங்கள் வாய்ப்பனவாகும்.[4] இவ்வுண்மைகளை எல்லாம் செவ்விதின் உணர்ந்தவர் நம் அருள்நந்திசிவம்! ஒரு சில மேனாட்டுத் தத்துவ நூலாசிரியர்களின் வரலாற்றினை நாம் படித்துப் பார்க்குங்கால், அவர்கள் உலகியல் ஒழுக்க நலங்கள் குறித்துப் பெரிதும் கருத்துச் செலுத்தியவர்கள் அல்லர் என்பது புலப்படும். அன்றியும், மேலைநாட்டுத் தத்துவ ஆசிரியர்களிற் பலர், வெறும் அறிவாராய்ச்சித் துறைகளில் மட்டுமே பெரிதும் ஈடுபட்டு நிற்கக் காண்கின்றேமே யல்லாமல், கடவுளுணர்வில் தலைசிறந்து நிற்கக் காண்கின்றிலேம். மற்று நம் இந்திய நாட்டிலும்கூட, ஒருசில தத்துவ ஆசிரியர்கள் கடவுளுணர்வு இல்லாதவர்களாக இருந்திருக்கின்றனர்.[5] இத்தகைய குறைபாடுகளுக் கெல்லாம் ஆசிரியர் அருள்நந்தி சிவம் தமது நூலில் இடந்தரவில்லை. அவர் தமது ஒப்புயர்

---

3. "It is often urged against Indian philosophy that it is non-ethical in character......Ethical perfection is the first step in divine knowledge."—Ibid. 52.

4. "The highest triumphs of philosophy are possible only to those who have in themselves a purity of soul..."—44.

5. "The Samkhya system is silent about the existence of God, though certain about its theoretical indemonstrability. Vaisesika and Yoga while they admit a supreme being, do not consider him to be the creator of the universe and Jaimini refers to God only to deny his

வற்ற தத்துவ நூலாகிய சிவஞானசித்தியாரின்கண் ஒழுக்க நெறி முறைகளைப் பெரிதும் வற்புறுத்துகின்ருர்! கடவுளுணர்வும் வழிபாடும் மக்களுக்கு இன்றியமையாதன எனக் கட்டுரைத் தருள்கின்ருர்!

" ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உபசாரம் உறவு சீலம்
வழுக்கிலாத் தவம் தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை
அழுக்கிலாத் துறவு அடக்கம் அறிவொடு அர்ச்சித்தல் ஆதி
இழுக்கிலா அறங்க ளாஞல் இரங்குவான் பணி அறங்கள் "

என்னும் செய்யுளால், உலகத்தோடு ஒட்ட ஒழுகல், யாவர் மாட்டும் நேயமுடைமை, இரக்கமுடைமை, நற் கடைப்பிடியுடைமை, தக்கவர்களைப் போற்றும் தன்மை, பிறர்பாற் கலந்து பழகும் இயல்புடைமை, இன்சொல் முதலிய நற் பண்புகளுடைமை, ஐம்பொறியடக்கல் விரதங்காத்தல் முதலிய தவமுடைமை, தக்கோர்க்கு உவகையோடு அளிக்கும் கொடையுடைமை, தன்னின் மூத்தாரை வழிபடுதல், பணிவுடைமை, மெய்ம்மை, பிறன்மனையையும் வரைவின் மகளிரையும் விழையாமையாகிய ஆண்டகைமை, தீநெறிக்கட் செல்லாத புலனடக்கம், தக்க இன்ன தகாதன இன்ன என்று பகுத்தறிதல், கல்வி கேள்வி முதலியவற்றின் உயர்ந்தாரைச் சிறப்பித்தல் என்னும் பதினாறும் சமய வாழ்க்கைக்குப் பொது வகையான் வேண்டப்படும் இன்றியமையா அடிப்படை ஒழுக்கப் பண்புகள் என விதித்தும், இவற்றின் மறுதலைத்த தீமைகளைச் சமய வாழ்க்கையொடு மாறுகொள்ளும் குற்றங்கள் என விலக்கியும், ஆசிரியர் அருள்நந்திசிவம் அருளிச் செய்திருத்தல், ஈண்டு நாம் அறிந்தின்புறற்பாலது ! இவ்வாற்ருல் சிவஞானசித்தியார் ஆகிய தத்துவநூலில் நீதிநூற் கருத்துக்களும் விரவிப் பயின்று வந்துள்ளமை காணலாம்.

இவ்வாறே மனிதப் பிறப்பின் அருமை, உலகியல் வாழ்க்கையின் நிலையாமை, இறை வழிபாட்டின் இன்றி

---

providence and moral government of the world. The early Buddhist systems are known to be indifferent to God. and we have also the materialist Carvakas, who deny God, ridicule the priests, revile the Vedas and seek salvation in pleasure."—Ibid., 27.

பமையாமை முதலிய செய்திகளையும், ஆசிரியர் அருள்நந்தி சிவம் இனிதெடுத்து உருக்கம் மிக உணர்த்தும் திறம், எவருளத்தையும் கவரும் இயல்புடையதாகத் திகழ்கின்றது.

"நாற்பயில் தேயந் தன்னில் நான்மறை பயிலா நாட்டில்
விரவுதல் ஒழிந்து தோன்றல் மிக்கபுண் ணியந்தான் ஆகும்!
தரையினிற் கீழை விட்டுத் தவஞ்செய் சாதியினில் வந்து
பரசம யங்கள் செல்லாப் பாக்கியம் பண்ணொ ணாதே."

"மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக் காக அன்றோ?
வானிடத் தவரும் மண்மேல் வந்தான் தனைஅர்ச் சிப்பர்!
ஊனெடுத் துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ!"

"ஒருபுலன் நுகரும் போதுஅங்கு ஒன்றில்லை; ஒன்றின் பாலும்
வருபயன் மாறி மாறி வந்திடும்; எல்லாம் மாறும்; [க்கை,
ஒருபொழுது உணரின் உண்டாம் அல்லதுஇவ் அல்லல் வாழ்
மருள்கன வதுவும் போல மாயும்பின் மாயும் அன்றே!"

"பிணத்தினை ஒத்து வாழ்வோர் பின்,நடைப் பிணங்கள் போல
உணக்கியே உழல்வீர் உங்கள் உடலுயிர் உணர்வு மெல்லாம்!
கணத்திடைத் தோன்றி மாயும் காயம்என் றறிந்தொ ருக்கால்
வணக்குறீர் அரனை! என்றும் வானவர் வணங்க வைப்பன்!"

இறையருட்டிறன்: இந்தியச் சிந்தனைகளெல்லாம் இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையேயுள்ள இனிய நேயத் தொடர்பினை விளக்கும் முறையில் அமைந்துள்ளன. ஆனால் இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையே பெரியதோர் இகலும் பகையும் ஏற்பட்டிருப்பதுபோன்றே மேலை நாட்டுணர்வு சென்றுள்ளது. இவ்வுண்மைக்கு இவ்விரு நாட்டின் புராண கதைகளும் சான்று பகரும் என்பர் அறிஞர்.[6] அஃதெங்ஙனமாயினும், இறைவன் உயிர்கள் மாட்டுப்

6. "There is a cordial harmony between God and man in Indian thought, while the opposition between the two is more marked in the West. The mythologies of the peoples also indicate it. The myth of Prometheus, the representative man, who tries to help mankind by defending them against Zeus who desires to destroy the human race and supplant them with a new and better species, the story of the labours of Hercules who tries to redeem-

பொருள் கொண்டு புரிந்தருளும் அருட்டிறங்களை யெல்லாம் ஆசிரியர் அருள்நந்திசிவம் அழகுற விளக்கியருள்கின்றார். அகளமாய் யாரும் அறிவரிய நிலையிலுள்ள இறைவன், தனது பேரருட்டிறனால் மக்களெல்லாம் ஈடேறுதற் பொருட்டுச் சகள வடிவம் மேற்கொண்டு, மானைக் காட்டி மானைப் பிடிப்பதுபோல மானுடச் சட்டை தாங்கி, அருள் ஞானப் பெருங்குரவனாக எழுந்தருளிப் போந்து, பல வகைத் தீக்கைகளைச் செய்து, மலமாசுகளை அகற்றித் தூய்மை செய்து ஆட்கொண்டு, சிவபோகப் பெருவாழ்வை யளித்தருளும் பெருங்கருணை நலத்தினைப் பின்வரும் சிவ ஞானசித்தியார் செய்யுட்கள் சிறப்புற விளக்குதல் காண லாம்!

"மன்னவன்றன் மகன்வேடர் இடத்தே தங்கி
வளர்ந்தவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ என்றவரிற் பிரித்துப்
பெருமையொடும் தானாக்கிப் பேணு மாபோல்,
தன்னியல்பும் புலவேடர் சுழலிற் பட்டுத்
தனைஅறியா தயருறும்தொல் லுயிரை
மன்னும்அருட் குருவாகி வந்து,அவரின் நீக்கி
மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்"

"சித்தாந்தத் தேசிவன்றன் திருக்கடைக்கண் சேர்த்திச்,
செனனமொன்றி லேசீவன் முத்தர் ஆக
வைத்துஆண்டு, மலங்கழுவி, ஞான வாரி
மடுத்து, ஆனந் தம்பொழிந்து, வரும்பிறப்பை அறுத்து,
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்பன்! என்று
மொழிந்திடவும், உலகரெலாம் மூர்க்கர் ஆகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவர்! இதுஎன்ன பிராந்தி?"

(தொடரும்)

---

the world, the conception of Christ as the Son of Man, indicate that man is the centre of attention in the West... In India man is a product of God. The world is due to the sacrifice of God. The Purusha Sukta speaks of such an eternal sacrifice which sustains man and the world." —Ibid., 41.

# சிவார்ச்சனு போதம்

(திரு. மு. அருணுசலம், எம்.ஏ.)

சிவப்பிரகாசத்துக்கு மதுரைச் சிவப்பிரகாசர் எழுதிய பேருரையானது, மிகப் பெரிய சைவ சித்தாந்தக் கருவூல மாயுள்ளது. அதிலிருந்து கிடைக்கின்ற சைவ சித்தாந்த நூற் செய்திகள் எண்ணில்லாதன. சிவப்பிரகாசர் பெரிதும் போற்றிக் குறிப்பிடுகின்ற திருநெறி விளக்கம் என்ற 100 பாடல் கொண்ட சிறுநூல், சென்ற ஆண்டு சித்தாந்தம் இதழ்களில் வெளிவந்தது; அன்பர்கள் பார்த்திருப்பார்கள்.

சிவார்ச்சனு போதம் என்ற மற்றெரு நூலைச் சிவப்பிரகாசர் குறிப்பிடுகின்ருர். விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்ற மூவகை உயிர்களுக்கும் இறைவன் அருள்புரிகின்ற முறைமையைக் கூறுகிற "மூவகை ஆருயிர்வர்க்கம்" என்ற சிவப்பிரகாசம் எட்டாம் பாடலின் உரையில் இவ்வுரைகாரர் சிவப்பிரகாசத்துக்கு விளக்கம் எழுதும்போது, முதலில் சிவஞானசித்தியார் திருவிருத்தம் ஒன்றை எழுதி, அடுத்துச் சிவார்ச்சனு போதப் பாடலைக் கூறுகின்ருர். கூறும் முதல் பாடல் பின்வருமாறு :

வைத்தமலம் மலங்கன்மம் மலங்கன்மம் மாயை
மருவுவிஞ் ஞானகலர் பிரளயாகலர் சகலர்
இத்தகைமை யிவர்க்கீசன் இவையகல அருளால்
இயற்றுவதோர் செய்திஇரண் டாகுந்தீ விரநற்
சத்தியினல் முன்னிருவர்க் காசான் மூர்த்தி
தரியாதே தான்பண்ணும் நிராதாரந் தரித்து
வித்தகமா மந்தத்தீ விரத்தாற் பின்னர்
விளம்புமிவர்க் குச்செய்யுஞ் சாதாரம் அன்றே.

உரைகாரர், இறைவன் விஞ்ஞானகலரையும் பிரளயாகலரையும் நிராதாரமாக நின்று அருள்செய்வான் என்றும், சகலரைச் சாதாரமாகவந்து, அதாவது குருவடிவில் மறைந்து நின்று, அருள்செய்வான் என்றும் கூறுவதற்கு இப் பாடலை மேற்கோள் காட்டுகிருர். இப் பாடலானது சித்தியார் 254-ஆம் பாடலுக்குப் பொழிப்புரைபோல் அமைந்துள்ளது. அந்தச் சித்தியார் பாடல் பின்வருமாறு :

உரைதரும்இப் பசுவர்க்கம் உணரின் மூன்றும்
உயரும்விஞ் ஞானகலர் பிரளயா கலர்சகலர்
திரையின்மலம் மலக்கன்மம் மலங்கன்மம் மாயை
நிற்கும்முத லிருவர்க்கு நிராதார மாகிக்
கரையில் அருட்பரன்துவிதா சத்திநிபா தத்தால்
கழிப்பன்மலம் சகலர்க்குக் கன்ம வொப்பில்
தரையில் ஆசான்மூர்த்தி ஆதார மாகித்
தரித்தொழிப்பன் மலம்சதுர்த்தா சத்திநிபா தத்தால்.

இரண்டையும் ஒப்பு நோக்கும்போது, சித்தியார் பாடற் கருத்தையே 'சிவார்ச்சனா போதப் பாடல்' வேறு சொற்களால் சொல்வது தெளிவாகும்.

மற்றொரு பாடல் பின்வருமாறு :

செய்யும்வகை இரண்டுபடி யாகும் நேரில்
திகழ்ஞான வதிகிரியா வதியென்று செப்பி
உய்யும்வகை உவந்தமனோ பாவகத்தால் மலங்கள்
ஓட்டுவது ஞானவதி; ஒண்கிரியா வதிதான்
வையம்திகழ் குண்டமண் டலமிட்டு மற்றும்
மருவுதிரு மேற்கட்டி கட்டிவளர் தருப்பை
கொய்யுமல ராற்செய்த மாலைகளும் தூக்கிக்
கும்பகல சங்களுங்கொண் டியற்றுவன குறித்தே.

இப்பாடல் ஔத்திரி தீக்கையின் முறையைக் கூறுவது. ஏழாவது தீக்கையாகிய இது அபக்குவர்க்கும் செய்வது. இஃது இரண்டுவகை: ஞானவதி, கிரியாவதி என. இப் பாடலானது, பின்வரும் சித்தியார் திருவிருத்தத்தை ஆதாரமாகக் கொண்டுள்ளமை புலனாகும் (சித்தியார் 255).

பலவிதம்ஆ சான்பாச மோசனந்தான் பண்ணும்
படிநயனத் தருள்பரிசம் வாசகம் மானதமும்
அலகில்சாத் திரம்யோகம் ஔத்தி ராதி
அநேகமுள; அவற்றின் ஔத்திரி இரண்டுதிறனும்
இலகுஞா னக்கிரியை யென;ஞானம் மனத்தால்
இயற்றுவது; கிரியைஎழிற் குண்டமண்ட லாதி
நிலவவித்துச் செய்தல்;கிரி யாவதிதான் இன்னும்
நிர்ப்பீசம் சபீசமென இரண்டாகி நிகழும்.

சிவப்பிரகாசர் உரையின் சிறப்பு, அவர் மேற்கோள் காட்டும் நூலின் பெயரைத் தவருமல் குறிப்பிடுவதாகும். இவ்விரு பாடல்களேயும் சிவார்ச்சனு போதம் என்று அவர் குறிப்பிட்டிருக்கிருர்.

இவ்விரண்டினுள் முதற் பாடலாகிய "வைத்தமலம் மலங்கன்மம்" என்ற பாடல் குருமொழி என்ற சிறு நூலினும் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. இச்சிறுநூல் முதலில் மதுரைச் செந்தமிழ்ப் பிரசுரமாக வெளிவந்தது. பின் சித்தாந்தம் இதழில் திரு. அனவரதவிநாயகம் பிள்ளையால் உரையுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

குருமொழியின் உரையானது பூசைக்கிரியைகளின் தத்துவத்தை உணர்த்துவது. சிவபெருமான் குருமூர்த்தமாய் எழுந்தருளிச் சகலருக்கு அனுக்கிரகம் செய்வதற்கு இப் பாடலே அவ்வுரைகாரர் மேற்கோள் காட்டுகிருர். காட்டுமிடத்து நூலின்பெயரைக் கூருமல் "என்றூர் உமாபதி சிவன்" என்கிருர். இவர் இப்பாடல் அடங்கிய நூலின் பெயரைக் குறிப்பிடாத போதிலும்கூட இவர் கருத்துப்படி இந்நூலே உமாபதிசிவன் செய்தார் என்ருகிறது. எனவே, சிவார்ச்சனு போதம் உமாபதிசிவன் செய்த நூல். மதுரைச் சிவப்பிரகாசர் உரையில் சித்தியாரை அடுத்துச் சிவார்ச்சனு போத மேற்கோள் வந்துள்ள அமைப்பை ஊன்றி நோக்கும்போது, இந்நூலும் பெருமை மிக்கது என்று கொள்ளவேண்டியிருக்கிறது.

மேலும், சிவார்ச்சனு போதச் செய்யுட்கள் இரண்டையும் ஆயும்போது, இது ஒரு விரிந்த நூலாயிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. மெய்கண்ட சாத்திரங்களுள் மிகவும் விரிந்தநூல் சிவஞான சித்தியார்; சுபக்கம் மட்டும் 328 திருவிருத்தங்கள் உடையது. சிவார்ச்சனு போதத்திலிருந்து மதுரைச் சிவப்பிரகாசர் மேற்கோள் காட்டும் இரு செய்யுட்களைக் கொண்டு இந்நூலும் மிக விரிந்த சாத்திரநூலா யிருக்கலாம் என்று நாம் யூகிக்க இடமுண்டு.

சிவஞான சித்தியார்போல விரிவுடைய பண்டைய சித்தாந்த நூல் தத்துவப் பிரகாச மொன்றுதான்; இது 338 விருத்தங்களுடையது. சரியை, கிரியை, யோகம், ஞானம்

என்னும் நான்கு பாதங்களையும் முந்திய நூல்களின் வழியே விரித்துக்கூறும் சாத்திர நூல்.

சித்தாந்த சாத்திரம் பயில்வாருக்கும், பயின்று ஆங்குக் கூறிய நான்கு பாதங்களின் வழியே நிற்க விரும்பு வார்க்கும், பயில்வதற்குரிய நூல்கள், சித்தாந்த சாத்திரங் களும் பின்வந்த பல்வேறு கருவி நூல்களும் ஆகும். இக் கருவி நூல்களுள் சிறந்தன பலவுள்ளன. அவற்றின் வரிசையில் மிகப் பழமையான ஒன்று இச் சிவார்ச்சனை போதம் என நாம் கருதலாம்.

உமாபதிசிவன் இந்நூலைச் செய்தார் என்ற கூற்று ஆராய்தற்குரியது. உமாபதியார் சந்தான ஆசாரியருள் நான்காமவர். சிவப்பிரகாசம் முதலான எழு சாத்திர நூல்கள் செய்தவர். அன்றியும் சேக்கிழார் புராணம், திருமுறை கண்ட புராணம், கோயிற் புராணம், திருத் தொண்டர் புராண சாரம் முதலிய நூல்களும் இவர் செய் தன என்பர். பௌஷ்கர வியாக்கியானம் என்ற வட மொழி நூலும் இவர் செய்தது என்பார்கள். இவருடைய வரலாறு பிரசித்தமாய் எல்லோரும் அறிந்தது.

இவற்றுக்கு மேலும் உமாபதியார் செய்தனவாகக் கூறப்பெறும் நூல்கள் சில. ஞானபூசாகரணம், ஞான பூசை, ஞான தீட்சை, ஞான அந்தியேட்டி, போசனவிதி என்னும் ஐந்தும் உமாபதிதேவ நாயனர் செய்தன என்று தருமபுரத்தார் பதிப்பித்திருக்கிறார்கள். உமாபதி என்ற பெயருடையவர் உமாபதி சிவாசாரியரையன்றி வேறு எவரும் இலர். இவ்வைந்து நூல்களும் உமாபதி சிவாசாரி யர் செய்தனவா என்பது ஆராய்தற்குரியது.

இவை ஐந்தையும் மதுரைச் சிவப்பிரகாசர் தம் உரை யில் எடுத்தாண்டிருக்கிறார். இவற்றுள், ஞான பூசைத் திருவிருத்தம் 6-இல், உமாபதிசிவம் மறைஞான சம்பந்தர் அருணந்தி மெய்கண்டார் தொடங்கித் திருநந்திதேவர் வரையுள்ள ஆசாரியர்களைத் தட்சிணத்துவாரத்து வைத்துப் பூசிக்க வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது. உமாபதி சிவம், தம்மைப் பூசையில்வைத்துப் பூசிக்கவேண்டுமென நூல் செய்தாரென்றால் பொருத்தமன்று. ஆதலால், இந் நூல் அவர் செய்ததன்று. எனவே, இந்நூல் உமாபதி சிவத்

துக்குப்பின் வந்தோர் செய்ததாகும் எனக் கொள்ளுதலே பொருத்தம்.

சிவார்ச்சனை போதமானது, சிவபூசையைக் கூறுகின்ற ஆகமங்கள், சோமசம்பு சிவாசாரியர், ஞானசிவாசாரியர் முதலிய பூர்வாசாரியர் சிவாகமத்தின் வழி விதித்த பத்ததிகள் ஆகியவற்றை மொழி பெயர்த்துச் செய்த நூல்களில் ஒன்று என்று சிவஞான சுவாமிகள் சித்தாந்த மரபு கண்டன கண்டனத்தில் கூறுகின்றார்.

இனி, சிவார்ச்சனை போதம் உமாபதி சிவம் செய்தது என்று குருமொழி யுரையால் அறிகிறோம். இந்நூல் இன்று கிடைக்கவில்லை. இருபாடல்களே கிடைத்துள்ளன. பாட்டின் அமைப்பைக்கொண்டு நூலின்போக்கை நாம் யூகிக்கமுடியும். முதல் நூலாகிய சிவஞானபோதத்துக்கு அருணந்தி சிவம், வழிநூலாகச் சிவஞானசித்தியார் விரித்துரைத்தார். இவற்றின் சார்பு நூலாக உமாபதிசிவம் இரண்டிலும் விடுபட்ட நுட்பங்களை விவரிக்க வேண்டிச் சிவப்பிரகாசம் செய்தார். இவ்வளவும் சைவ உலகம் அறிந்தசெய்தி.

இவற்றுக்கும் மேலாக இதுகாறும் கூறியவற்றால் நாம் அறிவது உமாபதிசிவம், சிவஞான சித்தியாருக்குச் சார்பு நூலாகச் சிவார்ச்சனை போதம் என்ற ஒரு விரிந்த நூல் செய்தார் என்றசெய்தி. இந்நூல் முழுதும் இன்று கிடையாமையால் இதுகுறித்து நாம் இப்போது மேலும் எதுவும் சொல்ல இயலவில்லை. ஏட்டு வடிவில் இது எங்கேனும் கிடைக்குமா என்று தேடுதற்குரியது.

---

# பதிகமா? பதிகமும் பாடலுமா? பாடல் மட்டுமா?

(திரு. கி. நாராயணசாமி)

சைவ சமயத்திற்கு அழியாத நிலைக்களம் திருக்கோயில்களே. அவை சம்பந்தர், அப்பர், சுந்தரர் உரைமாலைகளை அடிப்படையாகக் கொண்டவை. அவற்றைத் தேவாரம்

பெற்ற கோயில் என்பது மரபு. தேவாரச் சொல்லாட்சி சைவத் திருமுறைகளில் இல்லை; அது பின்வந்தது. தேவாரம்பெற்ற கோயில்களைப் பாடல் பெற்றவை என்றும் சொல்லுவோம். மூவரில் ஒருவரோ, இருவரோ, மூவருமோ பதிகம் பாடிப் பரவிய இடத்தை அப்படி வழங்குகிறோம். ஆழ்வார்கள் அருளிச் செயலில் குறிப்பிடும் திருமாலின் இடங்களை மங்களாசாசனம் பெற்ற திவ்ய தேசங்கள் என்போம். அவை 108 ஆகும். அவை யாவும் பதிகங்கள் பெற்றவை அல்ல. சில பாசுரங்களில் மட்டுமே வருபவை. சில பதிகங்கள் பெற்றவை. சில பதிகமும் பாசுரமும் பெற்றவை. இவை அனைத்தும் சேர்ந்ததே 108 ஆகும். ஆனால் பாடல் பெற்ற சிவன் கோயில்கள் என்று நாம் வழங்குவது பதிகமோ, பதிகங்களோ அல்லது இவற்றுடன் பாட்டுமட்டுமோ பெற்றதாகும். அவை 274 ஆகும். பதிகம் பெறாது பாட்டில் (பாசுரம்) மட்டும் வரப்பெற்றதை வைப்புத்தலம் என்பது சைவ மரபு. இவை தனியே ஏறக்குறைய 260 உண்டு. இவை 274-இல் சேர்ந்தவை அல்ல. இந்த வைப்புத்தல ஆராய்ச்சி நெடுநாளாக நிகழவில்லை. ஆதலால் மக்களிடை அதைப்பற்றிய கருத்தும், தெளிவு படாமல் குழப்பமாக இருக்கிறது. அதற்கு உரிய சூழ்நிலைகள் உருவாகவேண்டும். ஆராய்ச்சிக்கு அரண் செய்யும் திருக்கோயில்களின் கல்வெட்டு மூலங்கள் வெளிவர வேண்டும்.

முதல் படியாக, பதிகம் பெற்ற 274 இடங்களில் பல இடங்களை மூவரில் ஒருவர் அல்லது இருவர் பதிகத்தில் வழங்காது பாட்டில் மட்டும் அருளினார்கள். எடுத்துக்காட்டாகச் சுந்தரர் பிறந்த திருநாவலூர், சுந்தரரின் பதிகம் (7-ம் திருமுறை 17-ம் பதிகம்) பெற்ற தலமாகும். இத் தலத்தைச் சுந்தரரின் 'பாடல்' பெற்றதென்போம். அது பிழையான முறை. சுந்தரருக்குக் காலத்தால் முற்பட்ட அப்பர், திருநாவலூரைப் பாசுரத்தில் (5-ம் திருமுறை 65-ம் பதிகம் குறுந்தொகை 8-ம் பாட்டு) வைப்பாக அருளியுள்ளார். இது பலருக்குத் தெரியாது. ஆதலால் இத்தலத்தைச் சுந்தரரின் பதிகமும் பாடல்களும் அப்பரின் பாடலும் பெற்றது

என்று கூறுவதே, ஐயமும் திரிபும் பிழையும் அற்ற தெளிவான முறையாகும். பின்வரும் பட்டியலால் இதை அறியலாம். இம்முறையே சுந்தரர் பதிகம் பெற்ற திருஅஞ்சைக்களத்தைச் சம்பந்தர் தொகைவகையாகக் குறிப்பதும் அப்பர் மும்முறை ஆள்வதும் காணலாம். இந்த வகையான ஆய்வால் சுந்தரர் காலத்திற்குமுன்பே, அப்பர் காலத்திலேயே, இத்தலங்கள் சிறந்திருந்தமை அறியப்படும். மூவர் அருளிய இடங்கள் மூவரின் காலத்திற்கு முன்பே ஏற்பட்டது. அவர்களால் ஏற்பட்டதல்ல. அவர்கள் பதிகம் பாடிச் சிறப்பித்து ஏற்றம் தந்தார்கள். பதிகம் பெற்ற 274 இடங்களில், மூவரில் ஒருவர் அல்லது இருவர், பாட்டில் அருளியவைகளைப் பாட்டின் தொடர்ந்த எண்களுடன் (ம. பா. முதலியார் அடங்கன்முறை பதிப்புப்படி) அகரவரிசைப் படுத்தித் தரப்பட்டுள்ளது. இப்பட்டியலில் * இக்குறி இட்ட இடங்கள் சுந்தரர் பதிகம் பெற்றவை அல்ல; ஆனால் அவரது பாடலில் மட்டும் வருவது. ‡ இக்குறி இட்டவை சம்பந்தர் பதிகம் பெற்றவை அல்ல; ஆனால் சம்பந்தர் பாட்டில் மட்டும் வருவது; தொகை வகையில் ஆன்றோரால் கருதப்படுவது. † இக்குறி இட்டவைளும், எக்குறியும் இடப்பெறாத தலங்களும் அப்பர் பதிகம் பெற்றவை அல்ல; ஆனால் அப்பரின் பாடலில் மட்டும் வருவது.

அன்பர்கள் இந்தத் தெளிவான முறையை ஆட்சியில் கொண்டுவரவேண்டும். இன்றுள்ள தெளிவற்ற நிலைமையை மாற்றி அமைக்க முயற்சி செய்யவேண்டும். சிறப்பாகப் பட்டியலில் வரும் இடங்களிலுள்ள முப்போதும் திருமேனி தீண்டுவார்கள், கோயிலைக் காணவரும் அடியார்களுக்குத் திருத்தமாகச் சொல்லி, பாடி, தலத்தை ஆற்றுப்படுத்த வேண்டும். அறங் காவலர்கள் அந்தந்தத் தலவரலாற்றிலும் திருவிழா அறிக்கைகளிலும் பதிகங்களோடு இப்பாசுரங்களையும் வெளியிட வேண்டும். அந்தந்தத் தலத்தில் திருப்பதிகக் கல்லுடன், இப்பாசுரங்களையும் கல்லில் வெட்டி அமைக்க வேண்டும்.

அகத்தியான் பள்ளி 6480, 6950
அச்சிறுபாக்கம் 6947
‡†அஞ்சைக்களம் 1886, 6370, 6759, 6948, 6964
*அண்ணாமலை 7240, 7536, 7708
அம்பர்-பெருந்திருக்கோயில் 5854, 6313, 6467, 6761, 6947, 7106
†*அம்பர் - மாகாளம் 6241, 6310, 6752, 6758, 6872, 7187, 7621, 7706
அரதைப்பெரும்பாழி 6757, 6950
அவிநாசி 6973
†*அழுந்தூர் 6759, 6947, 7702
அறையணிநல்லூர் 6308
*ஆக்கூர் 7541
‡ஆப்பாடி 1886
ஆவூர் 6316, 6945
இடும்பாவனம் 6948
இடைச்சுரம் 6316
*இராமேச்சுரம் 7342
இரும்பூளை 6757
இலம்பையங்கோட்டூர் 6947
*இன்னம்பர் 7545
ஈங்கோய்மலை 6414, 6757, 6790, 6853, 6881, 6946
உறையூர் 4306, 6313, 6581, 6953, 6958
†*ஊறல் 6188, 6313, 6951, 7535
‡எதிர்கொள்பாடி 1886
ஏடகம் 6313, 6953
ஒத்தூர் 6319, 6851, 6951, 6958, 7060
கச்சூர் 6947, 6959
*கஞ்சனூர் 7343
‡*கடம்பந்துறை 1886, 7339
*கடம்பூர் 7239 (கரக்கோயில்) 7702
†*கடைமுடி 6946, 7343
*கண்டியூர் 7343
கரவீரம் 6316, 6757, 6947
*கருகாவூர் 7705
கருப்பறியலூர் 6757, 6953, 6959
களர் 6949
காவிரிப்பூம்பட்டினம் (பூம்புகார்) 6469, 7057, 7058
காறாயில் 6949, 7035
கானப்பேர் 4304, 4458, 6309, 6327, 6345, 6758, 6945, 7221
*கானூர் 7706
*கீழ்வேளூர் 7700
*குடமூக்கு 7396
குடவாயில் 5887, 6961
‡குரக்குக்கா 1886
†*குரங்கணில்முட்டம் 6314, 7338, 7534
*குரங்காடுதுறை 7542
குருகாவூர் 6952
†*குற்றாலம் 4249, 4309, 5565, 6252, 6254, 6307, 6314, 6488, 6605, 6672, 6686, 6946, 7051, 7338, 7703
*குறுக்கை 7337

கேதாரம் 6310, 6753, 6784, 6951, 6963
கேதீச்சரம் 6753
கைச்சினம் 6947
†*கொடுங்குன்றம் 6493, 7538
கொள்ளம்பூதூர் 5596, 6254, 6946
கொள்ளிக்காடு 6960
†*கோணமலை 6656, 7704
†*கோட்டாறு 6946, 6964
†*கோட்டூர் 6370, 6945, 7702
‡†கோடி (தென்) 1884, 6480, 7059, 7189
கோலக்கா 4307, 4598, 6311, 6964
*கோவலூர் 7235, 7336, 7396, 7542
சக்கரப்பள்ளி 6955
சாத்தமங்கை 6759, 7106
*சிக்கல் 7537
சிற்றேமம் 6307, 6952
சுழியல் 6318
செங்குன்றூர் 6948
சேய்ஞலூர் 4625, 6952
சோபுரம் 7535
தண்டலை 6760
†*தருமபுரம் 6254, 7336
‡தலைஆலங்காடு 1886
தலைச்சங்காடு 6316, 6760, 6946, 6960
*திரிச்சிராப்பள்ளி 7339
துறையூர் 6953, 6958
†*தெங்கூர் 6500, 6944, 7339, 7707
தேவூர் 6310, 6466, 6952
*நல்லூர் 7707
நறையூர் 6313, 6377, 6953, 6958, 6962, 7107, 7539
நன்னிலம் 5887, 6948
நாட்டியத்தான்குடி 6957
*நாரையூர், 6953 6958
நாவலூர் 5887
†*நெடுங்களம் 6315, 6784, 6948, 6964, 6966, 7343
*நெய்த்தானம் 7342, 7537, 7709
†*நெல்லிக்கா 5565, 6310, 6948, 6964, 7343
நெல்வாயில் 6315
நெல்வெண்ணெய் 6315
*நெல்வேலி 7624
பட்டீச்சரம் 6292, 6504
பரங்குன்றம் 6405, 6575
†*பரிதிநியமம் 6255, 6373, 7032, 7709
*பழனம் 7344, 7534, 7707
*பழையாறை 7340, 7534
பறியலூர் 6312, 6936
பனங்காட்டூர் 6311, 6950
பனந்தாள் 6950
பனையூர் 6311
பாச்சில் 6373, 6467
*பாசூர் 7240, 7705
பாதாள் 6950
†*பாம்புரம் 6474, 7344
‡பாலைத்துறை 1886
புனவாயில் 6961
பெரும்புலியூர் 6757, 6949
*பெருவேளூர் 7542
மண்ணிப்படிக்கரை 6949
மயிலாப்பூர் 6254, 6318, 6696

*மருகல் 7336, 7706
மாணிகுழி(டி) 6957
†*மாந்துறை 6310, 7704
மீயச்சூர் 4407, 6313, 6472, 6744, 6753, 6951, 7048, 7220
‡மூண்டீச்சரம் 1890
முருகன்பூண்டி 6944
முல்லைவாயில் 6944, 6961
வக்கரை 4805, 5447, 6752, 6949, 6983
வல்லம் 5884, 6313
*வலஞ்சுழி 7345, 7538.
‡வாட்போக்கி 1885
*வாய்மூர் 7703
வாழ்கொளிபுத்தூர் 6758, 6949
வியலூர் 6950
†*விளமர் 6313, 6919, 7707
விற்குடி 6758, 6957
வெஞ்சமாக்கூடல் 6951
வெண்துறை 6965
*வெண்ணியூர் 7338, 7536, 7706
வெண்ணெய்நல்லூர் 6308, 6949 (அருள்துறை)
வேட்டக்குடி 6957
வேள்விக்குடி 4312, 6949, 6957, 7057
வைகல் 6516, 6760, 6954
வைகாவூர் 6951


---

அப்பர் இல்லம், திருவதிகை: அப்பர் இல்லம் நன்கு துவங்கி நடைபெறவும் அதற்குரிய கட்டிட நிதிக்காகவும் கீழ்க்குறித்த பேரன்பர்களிடமிருந்து அவர்கட் கெதிராகக் குறித்த தொகை வரப்பெற்றேம். அவர்கள் செய்த பேருதவிக்கு இவ்வில்லம் நன்றி அறிவித்துக்கொள்ளுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1. | உயர்திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ., (ருக்குமணி குக்கர்) | ... | ரூ. 1001 |
| 2. | ,, பி. டி. எஸ். சிங்காரம் செட்டியார், குடந்தை | ... ,, | 51 |
| 3. | ,, ஆர். கந்தசாமி மூப்பனர், பி.ஏ., பி.எல்., குடந்தை | ... ,, | 51 |
| 4. | ,, ஆ. எம். எஸ். இராமசாமி முதலியார் அண்டு கோ | ... ,, | 101 |
| 5. | ,, முத்த. வே. சொக்கலிங்கச் செட்டியார், குடந்தை, ரைஸ்மில் | ... ,, | 51 |

குடந்தையில் வசூலுக்காகப் பேரார்வத்துடன் உதவிய உயர்திரு. பஞ்சக்கொல்லை ஆர். திருநாவுக்கரசு முதலியார், பி.ஏ., அவர்கட்கும் மனமுவந்த நன்றி.—ரா. சண்முகசுந்தரன், இயக்குநர்.

# சேக்கிழாருக்கும் சிறுமையா?

(நல். முருகேச முதலியார், பி.ஏ.)

வரலாற்றுப் பேராசிரியர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் 'பல்லவர் காலத்தில் இந்து சமய மறுமலர்ச்சி' என்ற தலைப்பில் 'ஹிந்து' ஞாயிறு 21-5-61 தேதித் தாளில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார்கள். அக்கட்டுரையில் காணப் படும் முக்கிய கருத்து என்னவெனின்: பல்லவர் காலத்து இந்து சமய மறுமலர்ச்சியின் வரலாற்றை முதல் முதலாக ஒழுங்குபடுத்திய பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, திரு. வெங் கையா முதலியவர்கள் இலக்கியம் கல்வெட்டுகள் முதலி யவைகளில் கிடைத்த சான்றுகளை உபயோகப்படுத்தியுள் ளார்கள். சேக்கிழார் பெரிய புராணத்தில் கூறியுள்ள பல செய்திகளை இவர்கள் சரித்திரச் சான்றுகளாகவே அதிகமாக நம்பியுள்ளார்கள். இது பொருந்தாது. ஏனெனின் சேக்கிழார் பெரிய புராணம் பல்லவர் காலத் துக்கு ஐந்தாறு நூற்றாண்டுகளுக்குப் பின் தோன்றி யது. புராணத்தில் வரலாற்றுக்கு ஒவ்வாத பல அற்புதங் கள் கூறப்பட்டுள்ளன. மேலும் சேக்கிழார் தம் வர லாற்றில் தற்கால ஆராய்ச்சியாளர்கள் கையாளும் முறை களைக் கையாண்டதாகத் தெரியவில்லை. எனவே, தற் சமயம் சில அறிஞர்கள் சேக்கிழாரின்பால் ஒரு சரித் திர ஆசிரியரின் இலக்கணங்களைக் கண்டு பாராட்டுவது பொருத்தமாகாது. திரு. சாஸ்திரியார் மேலும் கூறுவது: சீவகசிந்தாமணிக்கு மாறாகப் பாடப்பட்டது என்று கூறப் படும் பெரிய புராணம் சமண சமயத்தின் சில போக்குக ளைச் சைவத்தின்பால் அமைத்துக் கொள்வதற்கு ஆரம்பம் செய்தது. புராண வரலாறுகளைச் சமகால சரித்திரச் சான்று கள் ஆதரிக்கும் அளவில்தான் ஏற்றுக்கொள்ள வேண்டும், முரணுவதை வரலாற்று உண்மையாகக் கொள்ளக்கூடாது என்பதாகும். கடைசியில் சொன்ன கருத்தைச் சமயச் சார்புடையவர்களாயினும் சரி, வரலாற்று ஆராய்ச்சி யாளர்களாயினும் சரி, பொது முறையில் ஏற்றுக்கொள் ளுவர். ஆனல் திரு. சாஸ்திரியாரவர்கள் சேக்கிழாரின் பெரிய புராணத்தைப்பற்றியும், நாயன்மார்கள் வழிபாட்டு ஆரம்பகாலத்தைப் பற்றியும் சமண சமய சம்பிரதாயங்

களில் மூலம் காண்பது முற்றும் ஒவ்வாது என்பதைச் சிறிது எடுத்துக்காட்ட எழுந்ததே இக் கட்டுரையாகும்.

சேக்கிழார் தம் நூலைத் திருத்தொண்டர் புராணம் என்று கூறியிருந்தபோதிலும் அது பெரிய புராணம் என்று வழக்கில் வந்தமை, சமண இலக்கியத்தின் சாயல் என்று கூறுகிறார் திரு. சாஸ்திரியார். அதற்கு அவர் ஆதாரம் கூறுவது பின்வருமாறு: கங்க அரசனான ராஜமல்லன் IV என்பவனின் சிற்றரசனான சாவுந்தராயன் சிரவணபெலகோளத்தில் கோமட்டீஸ்வரர் சிலை அமைத்தவன். அந்தத் தலைவன் கி. பி. 978-ல் 'சாவுந்தராய புராணம்' என்ற சமண மகா புருஷர்களைப்பற்றிக் கூறும் ஒரு புராணத்தைக் கன்னடத்தில் பாடியுள்ளான். அதற்கு மற்றொரு பெயர் 'திரிசஷ்டி லக்ஷண மகா புராணம்' என்பது; அதாவது 63 மகா புருஷர்களின் இலக்கணங்களைக் கூறும் பெரும் புராணம். அதில் 24 தீர்த்தங்கரர்கள், 12 சக்கிரவர்த்திகள், 9 பாலபத்திரர்கள், 9 நாராயணர்கள், 9 பிரதி நாராயணர்கள் (மொத்தம் 63 பேர்கள்) இவர்களின் கதைகள் கூறப்பட்டுள்ளன. திரு. சாஸ்திரியார் கூறுகிறார்: (1) எடுத்த எடுப்பில் படுவது தமிழ்ப் பெரிய புராணம் இந்தச் சமண மகா புராணத்தின் சரியான பாடம், (exact rendering), (2) 63 சமண மகாபுருடர்கள் 63 சைவ நாயன்மார்களுக்கு மூலப் பிரதியாக (prototype ஆக) உபயோகப்பட்டிருக்கலாம், (3) திருத்தொண்டத் தொகையில் 62 தனி அடியார்கள் மட்டும் பாடப்பட் டிருந்தபோதிலும் சேக்கிழார் சுந்தரமூர்த்தி நாயனாரையும் சேர்த்தது சமண புராணத்தின் 63-க்குச் சமனாக்க வேண்டுமென்று கருதியோ என்று எண்ணுவதற்கும் இடந்தருகிறது. சேக்கிழார் இதைப்பற்றி ஒரு விளக்கக் குறிப்பும் தம் புராணத்தில் தரவில்லை. இது தாம் சமண புராணத்தை உதாரணமாக எடுத்துக் கொண்டதை வெளிப்படுத்த விரும்பவில்லை போலும் – என்கிறார் திரு. சாஸ்திரியார்.

திரு. சாஸ்திரியார் எழுப்பியுள்ள ஐயப்பாடுகளை சைவர்கள்மட்டும் அல்ல, சமய, இலக்கிய, வரலாற்று ஆராய்ச்சியாளர்கள்கூடச் சிந்தித்து முடிவுக்கு வரவேண்டியது கடமையாகும். யாம்செய்த சிறு ஆராய்ச்சியில் கண்ட கருத்துக்களை ஈண்டு வரைந்துள்ளோம்.

'சாவுந்தராய புராணம்' அல்லது 'ஆதி புராணம்' கருநாடக சாஹித்திய பரிஷத்தாரால் திரு. ஆர். ரகுநாத ராவ் எழுதிய முன்னுரையுடன் 1928-ம் ஆண்டு பெங்களூரில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இது சுமார் 120 பக்கங்கள் மட்டும் கொண்ட ஒரு சிறு நூல். இது கன்னடத்தில் எழுதப்பட்டுள்ளது. செய்யுளும் வசனமும் கூடிய 'சம்பு' நடையிலுள்ளது. சாவுந்தராயன் கங்க அரசர்கள் மாரசிம்மன் (கி. பி. 961—974), ராசமல்லன் சத்தியவாக்கியன் IV (கி. பி. 974—977), ராக்கசகங்கன் ராச்சமல்லன் (கி. பி. 977—984) இவர்களின் கீழ் அதிபதியாக இருந்தவன். கூச்சிபட்டாரகன் முதலியோர் ஏற்கனவே இந்தப் புராணத்தைப் பாடியுள்ளதாக நூலாசிரியனே கூறியுள்ளான். ஆனால் அவை 24 தீர்த்தங்கரர்களைப் பற்றியேதான் கூறின. பின்னால் குணபத்திரகவி என்பவன் கிருஷ்ணன், பலராமன் முதலியவர்களைச் சேர்த்து 63 தீர்த்தங்கரர்களாக்கி 'திரிசஷ்டி புருஷ பிரதிபத்த புராணம்' என்று பேர் புனைந்தான். சாவுந்தராயனின் கன்னட புராணம் குணபத்திரனின் நூலை மூலமாக உடையது. இயற்றிய காலம் கி. பி. 978. பதிப்பாசிரியர் திரு. ரகுநாதராவின் முகவுரையில் இக் கன்னட புராணம் தென்னாட்டு முறையில் அமைந்துள்ள தென்றும், அதில் பல தமிழ்ச் சொற்கள் காணப்படுகின்றன வென்றும் குறிக்கப்பட்டுள்ளது. (இந்தக் குறிப்பு முக்கியமாகக் கவனிக்கத் தக்கது.)

முதலாவதாக, சேக்கிழார் இந்தக் கன்னட புராணத்தாலோ அல்லது அதற்கு முன்போந்த வடமொழிப் புராணங்களினாலோ தம் திருத்தொண்டர் புராணத்தைப் பாட ஏவுதல் பெற்றிருக்கக் கூடுமோ என்று ஆராய்வோம். சேக்கிழார் புராணத்துக்கு முதல் நூல் சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய திருத்தொண்டத் தொகை (9-ம் நூற்றாண்டு) யும், வழிநூல் நம்பியாண்டார் நம்பி அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியுமே என்பது புராணத்துக்குள்ளேயே அகச்சான்றுகளாக அமைந்துள்ளது. மெய்த்திருத்தொண்டத் தொகை சிவபிரான் அருளினால் பெறப்பட்டதென்றும், அந்த மெய்ப் பதிகத்தடியார்களை நம் நாதனும் நம்பியாண்டார் நம்பி புந்தியாரப் புகன்ற வகையினால்

வந்தவாறு வழாமல் தாம் அன்பினால் புராணமாக இயம்பினர் என்றும் சேக்கிழார் திருமலைச் சருக்கத்தில் தாமே கூறியுள்ளார். இருமுறை 'மெய்ப்' பதிகம் என்றும், வந்தவாறு–புகன்றவாறு–வழாமல் என்பனபோலப், பல இடங்களிலும் கூறியுள்ளார். எனவே சேக்கிழார் திருத்தொண்டர்கள்வரலாற்றையோ தொகையையோ கூட்டவும்குறைக்கவும் இல்லை என்று வுலப்படுகிறது. 9-ம் நூற்றாண்டின் திருத்தொண்டத் தொகை முதல் நூலாக இருக்கும்போது, பின்னால்வந்த ஒருபிரசித்திபற்ற கன்னடபுராணம் சேக்கிழாருக்கு வழிகாட்டியென்று திரு. நீலகண்ட சாஸ்திரியார் கூறுவது வியப்பாகவே யிருக்கிறது. பெரிய புராணத்துக்கு மூலம் சிவ ரகசியம் ஒன்பதாம் அம்சம் என்றும், மகா ஸ்கந்தபுராணத்தைச் சார்ந்த உபமன்னியு சிவபக்த விலாசம் என்று சொன்னகாலம் போய், இப்போது நவீனமாக ஒரு கன்னடத்திலுள்ள சமண புராணத்தை மூலம் என்று கற்பனைசெய்வது ஆச்சரியமாகவே இருக்கிறது. எனினும் சேக்கிழார் சமண புராணத்துக்குக் கடன்பட்டதை வெளிப்படுத்த விரும்பி யிருக்கமாட்டார் என்று திரு. சாஸ்திரியார் கூறுவதாலே சமண இலக்கியச் செல்வாக்கு சேக்கிழார் காலத்தில் (12-ம் நூற்றாண்டு) எவ்வளவு இருந்ததென்று சிறிது ஆராய்வோம். 'பதினோராவது நூற்றாண்டு முதல் கன்னடத்திலே சமணத்தின் மேல்நிலை குறைய ஆரம்பித்தது. முழுவதும் தீர்வதற்கு 200 ஆண்டுகள் சென்றன. இவ்வாறு தமிழ் நாட்டிலே சமண ஆதிக்கம் குறைவதற்குச் சைவ வைணவ சமயாசாரியர்கள் காரணர்களாயிருந்ததுபோலத் தெலுங்கு கன்னட நாடுகளிலே அது குறையக் காரணமாயிருந்தவை சங்கராசாரியரின் (கி. பி. 750) வருகையும், சோழர் (கி. பி. 1100) வெற்றியும், வீர சைவ வசவேசரது (கி. பி. 11:0) இலிங்கமதம் பரவுதலும், இராமாநுசர் மேல்கோட்டைக்குச் சென்றமையும், மத்துவாசாரியார் (கி. பி. 1110) வருகையுமேயாம்' என்று பெரியபுராண ஆராய்ச்சி நிபுணர் திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் தம் 'சேக்கிழார்' என்ற அரிய நூலிலே குறிப்பிட்டுள்ளார்கள். எனவே இந்தக் கன்னட சாவுந்தராய புராணத்தைச் சேக்கிழார் அறிந்திருப்பாரோ என்பதையே சந்தேகிக்க வேண்டி யிருக்கிறது. குரு பாரம்பரியங்களைப் பாடுவது

எல்லாச் சமயங்களிலுமுள்ள வழக்கு. சேக்கிழார் இந்தச் சமண புராணத்தைப் பின்பற்றித் தாம் பெரிய புராணம் பாடினர் என்பது முற்றும் ஒவ்வாது. மேலும் கர்ண பரம்பரைக் கதையும் பெரிய புராணம் சீவகசிந்தாமணிக் கதைக்கு மாருகப்பாடினது என்று கூறுகிறதேயொழியச் சமண தீர்த்தங்கரர்கள் சரித்திரங்களுக்கு ஒப்பாக நாயன்மார்கள் சரித்திரங்களைச் சேக்கிழார் அநபாய சோழனுக்குப் பாடித்தந்தார் என்பதை எவரும் சொன்னதும் கேட்டதும் இல்லை. எனவே திருத்தொண்டத் தொகைதான் முதல் நூல் என்பதும், திரு. சாஸ்திரியார் அவர்களின் கூற்றில் சிறிதேனும் உண்மையில்லையென்பதும் தெற்றெனப் புலனுகும். உண்மையிலேயே சாவுந்தராயன் சுந்தரமூர்த்தி காலத்துக்குப் பிற்பட்டவனுகையினுலே, சாவுந்தராய புராணம் திருத்தொண்டத் தொகையை மூலப் பிரதியாகக் கொண்டு பாடியிருத்தல் கூடும். சாவுந்தராயனுக்கு முன் போந்த குணபத்திர கவியும் 'உத்தர புராணம்' இயற்றிய குணபத்திரனு யிருந்தால் (கி. பி. 898) அவனும் சுந்தரமூர்த்தி காலத்துக்குப் பிற்பட்டவனே. கூச்சிபட்டாரகனின் பூர்வ புராணம் 24 தீர்த்தங்கரர்களை மட்டும்தான் பாடியது. பின்வந்த சமண புராணங்கள் திருத்தொண்டத் தொகைக்கு இணையாக 63 பேரைப்பற்றிப் பேசியது போலும்.

இரண்டாவதாக, திரு சாஸ்திரியார் கூறுவது சேக்கிழார் சமணர்களின் மகா புருஷர்களை மூலப் பிரதிகளாக (prototype) வைத்து நாயன்மார்களின் கதைகளை எழுதினர் என்பது. சமண (வைணவம்கூட) குருபரம்பரைக் கதைகளையும், நாயன்மார்கள் கதைகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் சேக்கிழார்வரலாறு எவ்வளவு சரித்திர உண்மையுள்ளவை எனப் புலப்படும். தீர்த்தங்கரர்கள் முதலானவர்கள் பல யோஜனை நீள முடையவர்கள் - பல யுகங்கள் இருந்தார்கள் என்பவை போன்ற போக்குகள் பெரிய புராண வரலாறுகளில் சிறிதளவேனும் காணமுடியாது. அற்புதங்கள் (miracles) பல கூறப்பட்டிருக்கலாம். ஆனல் சமய வரலாறுகளில் அற்புதங்கள் உண்மையிலேயே நடைபெற்றிருக்கக் கூடும். வறட்டு வரலாறு வெறும் தேதி, சம்பவம் முதலியவைகளையே கூறும். சமய வரலாறு

(religious history) கடவுட்டன்மையடைந்த பெரியோர் கள் செய்த செயற்கரிய செய்கைகளையும் கூறுவது இயல்பே. தமிழ் மரபில் 'பெரியார்' என்பவர்களுக்கு இலக்கணமே செயற்கரிய செய்பவர்கள் என்பதுதான். சமயங்களிலே, அதிலும் ஒரே நாட்டிலிருந்த பல சமயங் களிலே இணையான (parallel) செய்திகள் இருக்கலாம். அக் காரணம்பற்றி ஒரு சமயம் மற்றொன்றிலிருந்து கடன் வாங்கியதென்று கூறுவது முறையாகாது. அது சேக் கிழாரின் நடுவு நிலைமைக்கும், நேர்மைக்கும், உண்மைக் கும், பரந்த நோக்குக்கும், அளப்பரிய ஆராய்ச்சிக்கும் ஒரு சிறிதேனும் பொருந்தாது. அறிவில் உயர்ந்து அமைச்ச ராக இருந்த அவர் இயற்றிய புராணத்திற்கு, அதுவரையில் உலாவிய எந்தப் புராணமும் இணையாகாது என்பதை நடுவு நிலைநின்று பார்ப்போர் யாவரும் ஒப்புக்கொள்வர். சுமார் எட்டு நூற்றாண்டுகள் காலப்பரப்பில் பல்வேறுசமயங்களில் இருந்த பெரியார்களின் சரிதைகளைச் சேக்கிழார் திருவருள் துணைகொண்டு உருவாக்கி இருக்கிறார்கள். இதைப்பற்றித் திரு. வி. கலியாண சுந்தரனார் தம் 'பெரிய புராணப்' பதிப் பின் முன்னுரையில் எழுதியுள்ளமை ஈண்டு நோக்கற் பாலது: "பெரிய புராணம் பௌராணிகத்தை வித்தாகக் கொண்டு எழுந்த நூல் அன்று. அது சரித்திரத்தை வித்தா கக்கொண்டு எழுந்த காவியம். காவிய இயலுக்கு ஏற்பச் சிற்சில விடங்களில் பௌராணிகமும் அதனிடை நுழைந் திருக்கிறது. நாயன்மார் பலர் சரித்திரத் தொடர்புடைய வர் என்பதைச் சரித்திர உலகம் ஏற்றுக்கொண்டது. கல் வெட்டுகளையும் வேறு பல சான்றுகளையும் ஆராய ஆராயப் பெரியபுராணம் சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட நூல் என்பது நனிவிளங்கும்." திரு சாஸ்திரியாரின்கூற்று, பேராசிரியர் சுந்தரம்பிள்ளை, திரு. வெங்கையா, திரு. ஜே. எம். நல்லசாமி பிள்ளை, திரு. சி. கே. சுப்பிரமணிய முதலி யார், திரு. வி. க., டாக்டர் இராசமாணிக்கனார் போன்ற ஆராய்ச்சியாளர்களின் கருத்துக்களுக்கு நேர்மாறாக இருக் கிறது. எனினும் அவர் சரித்திர உலகிலே பெரும் புகழும் பெற்றவர் ஆகையால் அவர் சொல்லியுள்ளதைக் கவனித்து ஆராய்ந்து மறுத்தல் எதிர்கால ஆராய்ச்சிப் போக்கு நல்ல முறையில் செல்ல உதவும் என்பதில் ஐயமில்லை.

மூன்றாவதாக திரு. சாஸ்திரியார் கூறுவது சமண புராணத்துக்கு இணையாகும்பொருட்டு, நாயன்மார்கள் தொகையைச் சுந்தரமூர்த்தி நாயனாரையும் கூட்டிச் சேக்கிழார் 63 (திரிசஷ்டி) ஆக்கினார் என்பது. நம்பியாண்டார் நம்பிகள் திருமுறை தொகுத்த காலத்திற்குப்பின் பெரிய புராணம் ஆக்கப்பட்டதனாலே சுந்தரமூர்த்தி நாயனாரைச் சேக்கிழார் விட முடியாதது இயல்பே. அன்றியும் தம் காவியத்துக்குச் சுந்தரமூர்த்தி நாயனாரையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டதாலும், மாதவஞ்செய்த தென்திசை வாழ்ந்திடத் தீதிலாத் திருத்தொண்டத் தொகைதர அவர் மண்மிசை வந்ததாலும், சுந்தரமூர்த்தி நாயனாரைத் திருத்தொண்டர்களுடன் கூட்டிப் பாடியது பொருத்தமே. (டாக்டர் இராசமாணிக்கனார் 'திருத்தொண்டர் புராணம்' என்ற தொடரில் 'திருத்தொண்டர்' என்பது சுந்தரரையே குறிக்கும் என்ற கருத்தும் கொள்வார்). சேக்கிழார் தொண்டர்களின் தொகையை 63 ஆக்குவதற்குச் சுந்தரமூர்த்தியைச் சேர்த்தார் என்பது வீண் வார்த்தையாகத்தான் தோன்றுகிறது. 63 என்னும் எண்ணுக்கு ஒன்றும் மந்திரசக்தியில்லை. சேக்கிழார் தம் பாயிரத்தில் "அளவிலா அடியார்" புகழ் கூறுகேன் என்றுதான் கூறுகிறார். அப்பாலும் அடிச்சார்ந்தார் புராணத்தில் "திருத்தொண்டத் தொகையிற் கூறும் நற்றொண்டர் காலத்து முன்னும்பின்னும்" இருந்த அடியார்களைப்பற்றியும் குறிப்பிட்டுள்ளார். எனவே அறுபத்துமூன்று நாயன்மார்கள் என்ற தொகை, சமண புராணத்தின் நகல் இல்லையென்பது கற்றறியாப் பாலர்களுக்கும் விளங்கும்.

திரு. சாஸ்திரியார் அறுபத்துமூன்று அடியார்கள் வழிபாடு கோயில்களில் பிற்காலத்தில் உண்டாக்கியது எனக் குறிப்பிட்டுள்ளார். அடியார்கள் வழிபாடு நெடுங்காலந் தொட்டே கோயில்களில் இருந்துள்ளது என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் நிரம்ப இருக்கின்றன. டாக்டர் இராசமாணிக்கனார் தமது 'சைவ சமய வளர்ச்சி' என்ற நூலில் 198—201-ம் பக்கங்களில் இவைகளைப் பட்டியல் செய்து தந்துள்ளார்கள். அவர்கள் சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூர் தேவாசிரிய மண்டபத்தில் நாயன்மார்கள் படிமங்களைப் பார்த்துத் தான் திருத்தொண்டத்தொகை

பாடியிருக்க வேண்டுமென்ற கருத்தும் கொள்வர். சில கல்வெட்டுகள் சில நாயன்மார்களையே குறிக்கின்றன. ஒற்றியூர், செம்பொனர் கோவில், ஆடுதுறை முதலிய கல்வெட்டுகள் திருத்தொண்டத்தொகை அடியார்களை முற்றிலும் குறிப்பிடுகின்றன. அனபாய சோழன் காலத்திலிருந்தே நாயன்மார்கள் வழிபாடு கோயில்களில் ஏற்பட்டிருக்க வேண்டும். திரு. ஹபவதனராவ் தாம் பதிப்பித்த மைசூர் கெஜட்டியர் வால்யூம் V (பக்கம் 792ல்) நஞ்சங்கோட்டிலுள்ள ஸ்ரீகண்டேசுரர் ஆலயத்திலுள்ள 66 சைவ அடியார்களின் சிலைகள் 11-ம் நூற்றுண்டு சோழர் காலத்தியது என்று குறிப்பிட்டுள்ளார். மாணிக்கவாசகரும் சேர்ந்த நாயன்மார்கள் தொகையை அறுபத்துமூவர் என்று எந்தக் காலத்திலிருந்து பெரும்பாலும் வழக்கில்வந்தது என்பது மேலும் ஆராய்ச்சிக்கு உரியது. ஆனல் தெய்வச் சேக்கிழார் 63 என்ற எண்ணிக்கையைக் குறிப்பிடவில்லை. இந்த எண்ணுடன் சமண திரிசஷ்டிக்கு ஒருவித சம்பந்தமும் இல்லை என்பது நனி விளங்குகிறது. மேற்கூறியபடி திருத்தொண்டத்தொகைக்கு இணையாகச் சமண திரிசஷ்டி அமைக்கப்பட்டதோ அறிகிலோம்.

சேக்கிழாரை மறக்கும் இயல்புடைய சைவர்களைத் தட்டியெழுப்பும் முறையில் திரு. நீலகண்ட சாஸ்திரியார் தொண்டு செய்துள்ளார்கள். அவர்கள் சேக்கிழாரைக் குறைகூறியதாக எண்ணுதல் கூடாது. அவர்தம் ஆராய்ச்சியிற் காணப்பட்ட சில கருத்துக்களைக் கூறியுள்ளார்கள். ஆராய்ச்சிக்கு ஒருமுடிவுகிடையாது. எனவே, கற்றவர்கள் உறங்காது நன்கு ஆராய்ந்து மெய்ப்பொருள் காண்பது கடனகும்.

---

திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபை: திருநாவுக்கரசர் திருநாள் 9—5—61லும், திருஞானசம்பந்தர் திருநாள் 4—6—61லும் கொண்டாடப் பெற்றன. இரு நாட்களிலும், காஞ்சிபுரம் "சித்தாந்தக் கலைமணி" வித்துவான் - திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்கள் முறையே "அப்பரின் ஒப்பில் பணி", "சிவஞானம்" என்ற தலைப்புக்களில் சொற்பொழிவு ஆற்றினர்.

# கொடிக்கவி

(திரு. பாலூர் - கண்ணப்ப முதலியார், எம்.ஏ., பி.ஓ.எல்.)

(மலர் - 34; இதழ் - 5; 205-ம் பக்கத் தொடர்ச்சி)

இறைவன் கரந்துறை நிலையில் இருப்பினும் 'அருள் புரிந்த வண்ணம்' இருத்தலின், அந்நிலை அருள் நிலையும் ஆகும். இந்த அருள் நிலையின் நுட்பத்தைத்தான் நடராஜரது கூத்துப் புலப்படுத்துகின்றது. இதுவே அனவரதத் தாண்டவக் குறிப்பு. இதனையே அனுபவ ஞானிகள் "வாராரும் கடல்புடை சூழ் வையமெல்லாம் ஈடேற ஏராரும் மணிமன்றுள் எடுத்த திருவடி போற்றி என்றும்" கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடும் கருணாகரக் கடவுளே என்றும், கூறியுள்ளனர். வாதவூரர் "இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க" என்று அத் திருவடியை வாழ்த்தினர்.

**இறைவன் நம்மை நீங்காமை**

உயிர் விடுதலைபெற விரும்பும். இதற்காகப் பலப்பல பிறவிகள் எடுத்து முயல்கிறது. ஆனால் ஆணவமாம் அரவத்தால் விழுங்கப்பட்டிருக்கிறது. இதுவே கேவலநிலை. பிறப்புள் படுவது பெத்தநிலை; முடிந்தநிலை சுத்தநிலை. மூலமலத்தால் கட்டுண்ட ஆன்மாவுக்கு உதவவே ஆகந்துகமலமான மாயை கன்மம்வந்து உயிரை அடைகின்றன. இது அழுக்கை நீக்க மற்றொரு அழுக்கைத் தேய்த்து ஆடையைத் தூய்மை ஆக்குவதைப் போன்றது. ஆணவம் அறிவு மறைப்புக்கும், மாயை கன்மம் அறிவு விளக்கத்திற்கும் காரணமாகும் என்றாலும் அதுவும் அழுக்கே. எனவே மூல மலத்தோடு இந்த இரண்டையும் சேர்த்து மும்மலம் என நம் மெய்கண்ட நூல்கள் சுட்டுகின்றன.

இங்ஙனம் உயிர் இம் மும்மலங்களில் கூடி இருப்பினும் குருநாதன் வழி ஈடேற இயலும். அந்த ஆசாரியனே அருள். அவனே ஆதாரம். அவனே இன்பூட்டுபவன். அத்தகையவனை உயிர்பற்றின் உயர்நிலை அடையலாம். இந்தக் குறிப்புக்களை உணர்த்தும் நிலையில்தான் நந்தி கொடிமரம் பலிபீடம் முதலியன ஆலயத்தில் அமைந்துள்ளன.

**கோயில் அமைப்பு**

இன்னோரன்ன அரும்பெரும் குறிப்புக்களைக்கொண்ட கொடிக்கவியின் முதல் பாடல்,

ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றேஇடம்; ஒன்றுமேலிடில்ஒன்
றொளிக்கும்; எனினும், இருளடராதுள் உயிர்க்குயிராய்த்
தெளிக்கும் அறிவு; திகழ்ந்துளதேனும், திரிமலத்தே
குளிக்கும் உயிர்அருள் கூடும்படிகொடி கட்டினனே.

இதற்கு முன் பாடலில் பதி பசு பாசங்களின் தன்மைகளை ஒருவாறு அறிந்தோம். மேலும் சில பொருள்களை உணர்தல் இன்றியமையாதது. முன் கூறப்பட்ட முப்பொருள்களைப்பற்றியும் தொடர்ந்து உணர்ந்துகொண்டே போதல்வேண்டும். ஆகவே, முப்பொருள்களுள் முதல் பொருளான பதியைப்பற்றி நினைக்கிறபோது அது பொருளாம் பொருள் ஆகிறது. அதுவே வள்ளுவரால் செம்பொருள் என்றும் மெய்ப்பொருள் என்றும் சுட்டப்பட்டது.

பொருளாம் பொருள்

உயிர் உயரவேண்டுமானால் உயர்த்தும் பொருளையே அடைதல்வேண்டும். பாசம் உயிரும் அறிவும் அற்ற பொருளாதலின் அதனால் உயிரை உயர்த்த முடியாது. உயிர் தானாக உயரவும், முடியாது. தன்னை உயர்த்த ஒரு பொருள் உயிர்க்குத் தேவை. அப்பொருள் பலவாகவும் இருத்தல் கூடாது. ஒரு பொருளாகவே இருத்தல்வேண்டும். இதைத்தான் திருமூலரும் "ஒன்று அவன்தானே என்றனர்." அந்த ஒருபொருள் சிவன் எனும் செம்பொருள்தான். இதனைப் பிற சமயத்தவரும் ஒவ்வுகின்றனர். நம்மாழ்வாரும் "ஒருவன் ஒன்று எத்தநின்ற நளிர்மதிச் சடையன்" என்று அருளிச் சென்றார். அப்பொருளே அது என்றும் குறிக்கப்பெறும். எசுர் வேதத்தின் நடுவே விளங்கும் திரு உருத்திரத்தில் "நமச்சிவாய சிவதராயச" என்று கூறப்படுவது. "இருக்வேதத்திலும் "வபி:சிவ" என்றும் கூறப்பட்ளது. இந்த வேதங்களின் உட்கிடையைத்தான் அப்பர் தமது திருப்பாலைத் துறைப் பதிகத்தில்

விண்ணினார் பணிந் தேத்தி வியப்புறும்
மண்ணினார் மறவாது சிவாய என்று
எண்ணினார்க்கு இடமா எழில் வானகம்
பண்ணினார் அவர்பாலைத் துறையாரே.

என்றருளிய இப்பதிகம் அவர் திருமுறைகளின் இடையில் திகழ்வதை ஊன்றி நோக்கத்தக்கது. இதுவே பொருளாம் பொருள். இதனை நாமாக உணர முடியுமா? முடியாது.

அவன் உணர்த்தினால் அன்றி உணர ஒண்ணாது. சிவத்தை அதாவது பொருளாம் பொருளை உணரச் சத்தியின் துணை தேவை. "தாயுடன் சென்று பின் தாதையைக்கூடி" என்ற பட்டினத்தடிகள் வாக்கும், "சிலைநுதல் இமயவல்லி திருக் கண் நோக்குற்றதன்றே" என்ற தெய்வச் சேக்கிழார் வாக்கும் இக் கருத்தை உட்கொண்டவைகளே. இச் சத்தியே சிவஞானமாகும். "சத்திதன் வடிவேதென்னில் தடையிலா ஞானமாகும்" என்பது சித்தியார். சிவத்தைச் சிவஞானத்தால்தானே அறியமுடியும். இவ்விரண்டும் நீக்க மற நின்றபொருள் அல்லவோ. இதனால்தான் அனுபவிகள் சத்தியாகிச் சிவமாகித் தனிப்பர முத்தியான முதல் என்றார் கள். சிவமாவது யாதினும் தோய்வில்லா மல் இருக்கும் சுயம்பிரகாச நிலையாகும். உயிர்களுடன் ஒன்றாயும், வேறாயும், உட னாயும் நிற்கும் நிலையில் சத்தி என்றும் கூறப்படும். சத்தி தான் சிவத்தைச் சாரில் எத்தொழிலும் வல்லதாம் என் னும் கருத்தில் தான் ஐந்தொழில் நடத்தும்போது பதி எனப்படுகிறான் சிவன். (தொடரும்)

சத்தியின் துணை

---

தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபை: நாளிது மார்ச்சு மாதம் 26-ம் நாள் முதல் மே மாதம் 12-ம் நாள் வரை தேவகோட்டை-பாலகவி, வயிநாகரம்-உயர்திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள் சிவஞான சித்தியார் (சுபக்கம்) நூலை வகுப்பு முறையில் சிறப்புறக் கற்பித்தார் கள். மேலும், அவர்கள் இந்நூலின் சிறப்பியல்புகளை யெல் லாம் மிகத் தெளிவாக விளக்கியதோடு, இன்றைய மேனாட் டுச் சிந்தனையாளர்கள் விளக்கும் அறிவியல் உண்மைகள் பலவும் நமது சைவ சித்தாந்தக் கொள்கைகளுக்கு அரண் செய்வனவாக உள்ளன என்றும் குறிப்பிட்டார்கள். நாள்தோறும் பல பெரியார்களும், தாய்மார்களும் வகுப்பில் கலந்துகொண்டார்கள்.

இவ்வகுப்பின் நிறைவுவிழா மே மாதம் 12-ம் நாள் இனிது நடைபெற்றது. அதுபோது பல பெரியார்கள் ஆசிரியரவர்களைப் பாராட்டிப் பேசினார்கள். சபையின் சார்பில் ஆசிரியரவர்கட்குப் பணமுடிப்பு வழங்கியபின் திருமுறைப் பாடல்களை இன்னிசையுடன் ஓத விழாக்கூட் டம் இனிது நிறைவு பெற்றது.

தீக்கை: மேற்படி வகுப்பில் கலந்து கொண்டவர்களில் 26 பேர்கள் சமய தீக்கையும், 7 பேர் விசேட தீக்கையும் ஆசிரியரவர்களிடம் பெற்றுக் கொண்டார்கள். விசேட தீக்கை பெற்றவர்களில் 6 பேர்கள் சிவபூசை எடுத்துக் கொண்டார்கள்.

ஆண்டு நிறைவு விழா: தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபையின் 77-வது ஆண்டு நிறைவு விழா நாளது ஜூன் மாதம் 24, 25-ம் நாட்களில் சென்னைத் தருமை ஆதீன சமயப் பிரசார நிலையம் வித்துவான் - தவத்திரு. சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையில் நடை பெறும். பேரறிஞர்கள் பலர் கலந்துகொண்டு சொற் பொழிவாற்றிச் சிறப்பிப்பார்கள்.

பூவாளூர்ச் சைவ சித்தாந்த சபை: 51-ஆம் ஆண்டு விழா, பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகள் திருமடத்தின் தலைவர் தவத்திரு. இராமசாமி அடிகளார் அவர்களின் சீரிய தலைமையில் 20, 21–5–61 தேதிகளில் மிகவும் சிறப்புற நிகழ்ந்தது. மதுரை திரு. கவிராஜ பண்டிதர் ஜெகவீர பாண்டியனார், பேரூர் கவியரசு-திரு. கு. நடேசக் கவுண்டர், திருமதி. ந. சுப்புலக்குமி, எம்.ஏ., திருக்குறள்வேள் - திரு. ஜி. வரதராசன், பி.ஏ., சித்தாந்தக் கலைமணி-திரு. சி. அருணை வடிவேலு முதலியார், திரு. அவ்வை - நடராசன், எம்.ஏ. ஆகிய பெருமக்கள் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றிச் சிறப்பித்தனர்.

மகிழ்ச்சி :—இலங்கைச் சத்தியாக்கிரகம் சம்பந்தமாகச் சிறைப்பட்டிருந்த சைவப் பெரியார் சர். கந்தையா வைத்தியநாதன் விடுதலை செய்யப்பட்டார் என்று பத்திரி கைகளில் காண மகிழ்ச்சி. அவர்கள் சைவத்துக்கும் திருக்கேதீச்சுர ஆலயத்துக்கும் செய்து வரும் தொண்டு இடையறாது வளருக!

காரைக்குடி திருவாசக விழா: 18—6—61 ஞாயிற்றுக் கிழமை, காலை மாலை ஆகிய இருபொழுதும் தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரி முதல்வர் திரு. அ. சீநிவாசராகவன் அவர்கள் தலைமையில் நிகழும். திருவாளர்கள் வி. சிவக் கொழுந்து, எஸ். கே. இராமராசன், மறை-திருநாவுக்கரசு சுப. அண்ணாமலை ஆகியோர் விரிவுரையாற்றுவர்.

சிறப்புறநிறைவு எய்தின. நிறைவு விழாப் பாராட்டுக் கூட்டத்திற்கு நீதிபதி திரு. ஆர். சதாசிவம், பி.ஏ., எம்.எல்., அவர்கள் தலைமை தாங்கினார்கள். அறநிலைய ஆணையர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பொதுப் பணிக் குழுத் தலைவர் திரு. வி. இரத்தின முதலியார், மாநில முதன்மை நடுவர் திரு. பி. எஸ். சோமசுந்தரம், திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, திரு. கொத்தமங்கலம் சுப்பு, திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை, திரு. டி. இராமலிங்க ரெட்டி, திரு. மணலி. இராமகிருஷ்ண முதலியார், பி.ஏ., ஆகியோர், ''திருவாசகமணி'' அவர்களின் செந்தமிழ்-ஆங்கிலப்புலமை நலங்களையும், சொல்வன்மைத் திறனையும், சமய உணர்வு தழைத்தோங்கி வளர அவர்கள் செய்து போதரும் அரும்பெரும் பணிகளையும் பெரிதும் பாராட்டிப் புகழ்ந்து போற்றினர். சிதம்பரம் ஸ்ரீசபாநாயகர் கோயிற் சார்பில் ஸ்ரீ வி. வி. சுவர்ண தீட்சிதர் அவர்கள் பொன்னாடை போர்த்தினார்கள். ஸ்ரீ கபாலி கோயில், சென்ன கேசவ சென்ன மல்லீஸ்வரர் கோயில்கள், மணலி இலட்சுமண முதலியார் அறக் கட்டளைகள் ஆகியவற்றின் சார்பில் 'திருவாசகமணி' அவர்களுக்கு ரூ. 2000-க்கு ஒரு 'செக்' வழங்கப்பெற்றது. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீலஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள், தருமபுர ஆதீன மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் ஆகியோரிடமிருந்து ஆசிச் செய்திகள் வந்திருந்தன.

திருமணம்: நமது சமாஜப் பேரன்பரும், சிலகாலம் சமாஜச் செயலாளராக இருந்து பணிபுரிந்தவரும் ஆகிய திரு. ஜி. எம். முத்துசாமிப் பிள்ளை, ஐ.ஏ.எஸ்., அவர்களின் அருமைப் புதல்வி, திருநிறை செல்வி, தனலட்சுமி அம்மைக்கும், கோபிச்செட்டிப்பாளையம் திரு. ஜி. என். வீராசாமிப் பிள்ளை அவர்களின் அருமைப் புதல்வர் திரு. பழநிச்சாமி அவர்களுக்கும், 28-5-61 ஞாயிறன்று, கோயமுத்தூர்த் தேவாங்கர் உயர்நிலைப் பள்ளித் தெருவில் உள்ள சமரச சன்மார்க்க சங்கத்தில் மிகவும் சிறப்புறத் திருமணம் நடைபெற்றது. பெருமக்கள் பலர் கலந்துகொண்டு வாழ்த்துரைகள் வழங்கினர். மணமக்கள் நீடினிது வாழ்க என்று சமாஜமும் தன் வாழ்த்துதலைத் தெரிவித்துக் கொள்கின்றது.

*இனியமுத்துச் சாமிநல்லார் இன்புதல்வி யாராம்*
*தனலட் சுமிஅம்மை, சால்போ—டெனைநலமும்*
*மிக்கபழ நிச்சாமி வேள்தன்னோ டின்பமுறத்*
*தக்கவகை வாழ்க! தழைத்து.*

**ஆனிமகத் திருமுறைப் பெருவிழா :** சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் சார்பில் திருக்கழுக்குன்றத்தில் வழக்கம்போல இவ்வாண்டும் ஜூன் மாதம் 16, 17, 18, 19 தேதிகளிற் சிறப்புற நடைபெற உள்ளது. மதுரையாதினம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள், திருக்குறள் அழகர் அடிகள், அருட்டிரு குன்றக்குடி அடிகள், இந்து அறநிலைய ஆணையர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல்., பண்டித - வீரபத்திரனார், திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்., திருப்புகழ்மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர், பி.ஏ., பி.எல். முதலிய பல பேரறிஞர்கள் கலந்து கொள்வார்கள். செல்வி. மயிலை ஜெ. விஜயலட்சுமி, திரு. பி. ஏ. எஸ். இராஜசேகரன், திரு. லோகநாதம், சங்கீதபூஷணம் திரு. பி. சுவாமிநாதன், தேவாரம்-த. நடராசன் முதலியவர்களின் திருமுறை இசையரங்குகளும் சிறப்புற நிகழும். வழக்கம் போலச் சிவத்திரு. வள்ளியம்மையார் அவர்களால் அடியார் திருக்கூட்டத்திற்கு அருளமுது வழங்கப்பெறும். அன்பர்கள் அனைவரும் கலந்துகொண்டு பயன் பெறலாம்.

---

**இரங்கற் கூட்டம் :** சிவபுண்ணியச் செல்வரும், அறச்செயல்கள் பல புரிந்தவரும், சமாஜ உறுப்பினருமான மயிலை திரு. ம. சொ. சம்பந்த முதலியார் அவர்களின் மறைவு குறித்து வருத்தம் தெரிவித்தற் பொருட்டுச் சமாஜம், மயிலை சமயப் பிரசாரசபை இவைகளின் ஆதரவில் ஒரு கூட்டம் 28-5-61 மாலை மயிலை வணிக வைசிய மண்டபத்தில் கூடியது. திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் தலைமை வகித்தார்கள். பல அன்பர்கள் காலஞ்சென்ற முதலியார் அவர்களைப்பற்றிப் பேசினார்கள். அன்னாருடைய குடும்பத்திற்கு அனுதாபம் தெரிவிப்பதெனத் தீர்மானிக்கப் பெற்றது. திரு. ம. சொ. சம்பந்த முதலியாரவர்கள் சமாஜத்திற்குப் பல வகைகளில் உதவி புரிந்ததோடு "சிவஞான போதம்" எளிய உரையுடன் வெளிவரப் பொருள் உதவிபுரிந்தார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

---

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14. Warren Road, Mylapore, Madras-4.